உ

சிவமயம்

ஸ்ரீ திருக்களர் ஆண்டவர் என்று வழங்கும்
வீரசேகர ஞானதேசிக சுவாமிகளின்
பாதசேகரராகிய

# ஸ்ரீ சாத்தப்ப சுவாமிகளின்
# பிரபாவம்




இஃது,

ஏம்பல் என்று பெயர் வழங்கிவரும்
**அண்டக்குடி நகரத்தார்கள் வேண்டுகோளின்படி**
**ஏம்பல் சுப்பைய சுவாமிகளால்**
செய்யப் பெற்று,

**ஸ்ரீ சாத்தப்ப சுவாமிகளின் அஷ்ட சம்வற்சரம்**
**குருபூசை விழாவில்**

விசுவாவசு வருஷம் கன்யா மாதம் 12-ஆம் தேதி
(28—9—65) மங்கள வாரம் வைசாக நக்ஷத்திரத்
தன்று வெளியிடப் பட்டது.

1965

53-2

உ

சிவமயம்

ஸ்ரீ திருக்களர் ஆண்டவர் என்று வழங்கும்
வீரசேகர ஞானதேசிக சுவாமிகளின்
பாதசேகரராகிய

# ஸ்ரீ சாத்தப்ப சுவாமிகளின் பிரபாவம்

இஃது,

ஏம்பல் என்று பெயர் வழங்கிவரும்
அண்டக்குடி நகரத்தார்கள் வேண்டுகோளின்படி
**ஏம்பல் சுப்பைய சுவாமிகளால்**
செய்யப் பெற்று,

**ஸ்ரீ சாத்தப்ப சுவாமிகளின் அஷ்ட சம்வற்சரம்
குருபூசை விழாவில்**

விசுவாவசு வருஷம் கன்யா மாதம் 12-ஆம் தேதி
(28—9—65) மங்கள வாரம் வைசாக நக்ஷத்திரத்
தன்று வெளியிடப் பட்டது.

1965

ஓம் தத் சத்

ஸ்ரீ திருக்களர் ஆண்டவர் என்று வழங்கும்
வீரசேகர ஞான தேசிக சுவாமிகளின்
பாத சேகரராகிய

# ஸ்ரீ சாத்தப்ப சுவாமிகளின் பிரபாவம்

ஆனைமுக னறுமுக னம்பிகை பொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையு ணடு.

[ஏம்பல் என்று பெயர் வழங்கிவரும் அண்டக்குடி நகரத்தாருக்குச் சொந்தமாய் ஏம்பல் சேகரம் தென்னகத்திபுரத்தில் எழுந்தருளியிருக்கும். ஸ்ரீ உமையாம் பிகை சமேத அகத்தீஸ்வரர் ஆலயத்திருப்பணி கைங்கிரியாளரும் ஷெ சுவாமி அம்மனிடத்தில் அன்புபூண்டு ஒழுகிய ஸ்ரீ சாத்தப்பசுவாமி அவர்களுக்கு மேற்படியார்களின் அன்பன் சுப்பைய சுவாமி எழுதிக்கொண்ட முடங்கல்களின் முக்கிய சாராம்சமான விஷயங்களின் தொகுப்பு].

## முதலாவது முடங்கலின் விஷயம்:

ஸ்ரீமத் அகண்டபரிபூரண சச்சிதானந்த சொரூபராயும் அகநோக்க மனதில் மாத்திரம் விளங்கும் வஸ்துவாயும் மேன்மை வாய்ந்த தென் பாண்டிநாட்டுத் தென்னகத்தீஸ்வரர் அருளால் ஆன்மபோதம்பெற்று அதன் வடிவமாய் நிலைத்துஅவ்வாத்ம ஞானத்தை அடிமைக்கு அருள் செய்ய வந்திருக்கிற குருமூர்த்தமாயும் அஸ்தூலாதி அதத்வியா விருத்தி இலக்ஷண விஷயராயும் ஜகத் ஜன்மாதி தடஸ்த

இலக்ஷண விஷயராயும் சச்சிதாநந்தாதி சொரூப இலக்ஷண ராயும் சதசத் விலக்ஷணமாயுள்ள மாயைக்கு அதிஷ்டான சொரூபராயும் சதுர்மறைக்கு அரிய சொரூபராயும் கல்யாண சொரூபராயும் எழுந் தருளியிருக்கிற ஸ்ரீ சுவாமிகளின் சரணாரவிந்தங்களை அகத்தில் வைத்து தியானித்தும் சிரத்தில் முடியாக வைத்து வணங்கியும் வாக்கால் துதித்தும் அஷ்டாங்காதி நமஸ்காரம் புரிந்தும் எழுதிக் கொண்ட விண்ணப்பம்.

அடியேனுக்கு,

மோகமெனும் கடல்கடந்து முத்தியெனுங்
கரை காண்பான் முதிர்ந்த நாலாம்
பாகமெனு மலர்கொண்டு பக்தியெனும்
புனலாட்டிப் பரிந்து சாத்திச்
சோகமெனப் பாவித்துத் துரியமெனும்
விளக்கேற்றிச் சோக நீங்கி
ஆகமெனுங் கோயிலின் கண்ணறிவென்னுங்
கணபதிக்கே அன்பு செய்வாம்.

என்னும் ஆன்றோர் வாக்கியப்படி அடியேனுக்கு அநுக்கிரகிக்க அதன்வழியால் அதன் கண் நிலைத்து ஆனந்தமடைந்து திருப்தி அடைந்து கொண்டிருக் கிறேன்.

அஷ்ட மங்கல சொரூபராயும் சச்சிதானந்த சொரூப இலக்ஷணராயும் விளங்கும் ஸ்ரீமத் ஆண்டவருக்கு

ஆதார பூர்வமாக அன்பர்கள் ஆராதிக்கும் அரிதாகிய விசாக நக்ஷத்திர வைபவம் சிறப்பாய் நடைபெற்றது.

இன்று அவ்வரிய விபூதிப் பிரசாதத்தை அன்புடன் அனுப்பியிருக்கிறேன். சுவாமிகளும் அன்பர்களும் அணிந்து கொள்ளப் பிரார்த்திக்கிறேன் அணிந்து கொண்டு.

ஈண்டு அடியேனை வலியுறுத்தும் அடாததுன்பங்கள் அகல அநுக்கிரகிக்க அன்புடன் பிரார்த்திக்கிறேன்.

உமையாம்பிகை சொரூபராயும் அவ்விலிங்கம் விளங்க அங்கத்தில் அக்கமணி அழகிய பூதியுடன் விளங்குபவராய் இருப்பவரும்.

ஊனமில்லா சொரூப வடிவமாக இலகும் குரவனுகியும்.

எல்லாவுயிரையும் ஒன்ருகப் பார்க்கும் ஏகரூப ஞானயோக முடையவராயும்

ஏகமே கருதுவார் இதயத்திலேயே விளங்கும் சொரூபராயும்

ஜயனுரென்றும் அகண்ட அமல சொரூபமாய் சாத்தப்பன் என்னும் நாமத்தோடு விளங்கு பவராயும்

ஒப்புயர் வில்லா ஒளிவடிவ சொரூபராயும்

ஓங்கார வடிவ பிரணவத்தின் லக்ஷிய சொரூபராயும்

ஔவியக்தாதி மாயையாதிகளுக்கு அதிஷ்டான சொரூபராயும்

சுவாமிகள் எழுந்தருளியிருப்பதால் அத்தகைய அநுக்கிரகம் செய்யவும் தாங்கள் உரிமையுடையவர் களாயிருப்பதாலும் அவ்வநுக்கிரகத்தைப் பெற அடிமை அருகதை உடையவனுகயிருக்கிறேன் என்ற, எண்ணமுடையவனுக யிருப்பதனுல் அவ்வநுக்கிரகத்தை அதிசீக்கிரமாக அநுக்கிரகிக்கும் படி ஆவலுடன் அன்பாய் எதிர் பார்த்துக் கொண் டிருக்கிறேன்.

இரண்டாவது முடங்கலின் விஷயம் :

சிதாகாச சொரூபமாயிலகும் சுவாமிகளுக்கு அடியேன் நமஸ்கார பூர்வகமாக எழுதிக் கொண்ட விண்ணப்பம் :

அருவமும் உருவமுமாகி அனுதியாய்ப் பலவாய் ஒன்ருய்ப் பிரமமாய் நின்றசோதி சொரூபமே சோதிப் பிழம்பாய் அரியதோர் மேனியாகிக் கருணைகூர்

முகங்களாறுங் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டு ஒரு திருமுருகன் என்ன, ஆங்கு உலகமுய்ய உதித் தனன் என்னத்தோன்றி தானவர்களால் வானவர் களையும் பூதத்தால் நக்கீரர் முதலிய அன்பர்களையும் வைக்கப்பட்ட சிறையையும் அதனுல் ஏற்பட்டதும் பிறவியினுல் ஏற்பட்டதுமான அநேகதுன்பங்களையும் தவிர்த்து ஆண்ட பூதேசனுகியும் சரவணபவனுகியும் மங்காத ஆற்றல் உடையவனுகியும் ஞான பண்டித னுகியுமுள்ள சிங்கார வடிவேலவனுடைய திரு வவதாரம் அமைந்ததுபோல சுவாமிகளும் அவ்வேல வன் வடிவமாகவே யிருத்தலினுல் அடியேன் முதலிய அடியார்களாகிய அமரர்கள் போன்றவர்களை மும்மல முப்பகை மூவேடணைகளாகிய தானவர்களால் வைக்கப்பட்ட அகலா சம்சார வடிவ சிறையையும் அதனுல் ஏற்பட்ட சனன மரண வடிவ துன்பங் களையும் சனனமரணமத்தியில் ஆசை கோப முதலிய பூதங்களால் வைக்கப்பட்ட ஆன்ம அனுன்ம அவிசாரத்துடன் கூடிய அகம்பாவ வடிவ சிறையில் வைக்கப்பட்டு அதனுல் உண்டாகிய அநேக துக்கங் களையும் தவிர்த்தாளும் பொருட்டு எழுந்தருளியிருப் பதனுல் மேலே கண்ட சிறைகளையும் துன்பங்களை யும் ஞானமாகிய சக்திவேலினுல் தவிர்த்து அருளி னீர்கள். அந்த ஞானமாகிய சத்திவேல் எங்களுக்கும் கொடுத்து இனிமேல் அத்தகைய சிறைகளும் துன்பங்களும் வாராதபடி காத்துக் கொள்ளும்படி அநுக்கிரகம் செய்திருக்கின்றீர்கள். அவ்வுபதேசக் கிரமம் எவ்வாறிருந்தது என்று மீண்டும் சிந்தித்துப் பார்த்தேன்.

அநித்திய பூதத்தேகம் நீ அன்று யிந்திரியங் களும் அன்று பிராணன்களும் அன்று மனம் புத்தி யாதி அந்தக் கரணங்களும் அன்று அவித்தையும் அன்று அதற்கப்பாற்பட்ட சூனியமும் அன்று சிதா பாசனும் அன்று இவைகளால் அறிய முடியாததும் இவைகளை இது இது என்று சுட்டி அறிவதாயும் இவைகளுக்கு அப்பால் பட்டதும் இவைகளை அறிபவன் சொரூபமாகவே எது எஞ்சி நிற்கின்றதோ அதுவே உன் வடிவம் என்றும், தூல பூதங்களும் அதன்காரியமாகிய நால்வகைப்பிறவி வடிவ எல்லாத் தூல சரீரங்களும் அவற்றிக் கிருப்பிடமாகிய எல்லா உலகங்களும் சேர்ந்து தற்பதார்த்த வடிவ ஈசனது தூல தேகமாம். இதுவும் முன் சொல்லிய கிரமப்படி லக்ஷியார்த்த அகண்ட பிரஹ்ம சேதனத்தால் விளக்கப்படுவதினுல் விளக்கப்படும் பதார்த்தமானது விளக்கும் வஸ்துவின் சொரூபமாகாதவாறு அதாவது இதுகடமென்று அறிபவனைப் பார்க்கிலும் அறியப் பட்டகடம் எப்படி அறிபவனது சொரூபத்திற்கு வேருே அதுபோல், இலக்ஷிய வடிவ அகண்ட பிரஹ்ம சேதனத்தால் விளக்கப்படும் இச்சமட்டி வடிவ தூலதேகம், விளக்கும் மேற்டி பிரஹ்மசேத னத்தின் சொரூபமாக மாட்டாது; என்று விலக்கியும், சூட்சும பஞ்சபூதங்களும் எல்லாசூட்சுமசரீரங்களும் சேர்ந்து, தற்பதார்த்த ஈசுரனது சூட்சும சரீரமாம். இச்சூட்சும சரீரமும், அத்தற்பதார்த்த லக்ஷியவடிவ பிரஹ்ம சேதனத்தால், இது என்று விளக்கப்படு கின்றதனுல், அப்பிரஹ்ம சேதனத்தின் வடிவமாக மாட்டாது; என்று நீக்கியும், எல்லாச் சீவர்களுக்கும்

மூலகாரணமாய் நான் அறியேன் என்னும் அநுபவத்திற்கு விஷயமாய் நாநாவாகயிருக்கப்பட்ட அவித்யா அம்சங்களும், அவற்றின் சொரூபமாய் தொடர்ந்து ஏகமாயிருக்கப்பட்டதும்,— ஈசனது காரிய விராட்டு இரண்ய கர்ப்ப சரீரங்களைத் தோற்றி ஒடுக்குவிப்பதனால், ஈசுரகாரண சரீரம் என்று பெயருடையமாயை எதுவோ, அது, தத்பதார்த்த ஈசனது காரண சரீரமாம். அதுவும், மேற்படி தத்பதத்தின் லக்ஷியார்த்த வடிவ பிரஹ்ம சேதனத்தினால் இதுவென்று விளக்கப்படுகின்றது. மேற்படி சேதனத்தால் விளக்கப்படும், இந்த மாயைவடிவ ஈசுரனது காரண சரீரமும், அறியப்படும் பதார்த்தமானதால் அறிபவனது சொரூபமாகாமல், வேருகியிருக்கிறது. எப்படி எனில், அறியப்படும் கடம், அறிபவன் சொரூபமாகாமல் வேருகவேயிருப்பது போல, மேற்படி பிரஹ்ம சேதனத்தால் விளக்கப்படும், இந்த மாயையும் மேற்படி பிரஹ்ம சேதனத்தின் சொரூப மாகாது, வேருகவேயிருக்கின்றது. ஆகையால், இந்த மாயை பிரஹ்ம சேதனமன்று. இம்மூவகைச் சரீரங்களுள் இத்தூல சூட்கமசரீரங்கள் சிருஷ்டியின் ஆதிகாலத்தில்தோன்றி, பிரளயகாலத்தில் ஒடுங்குகின்றன. மாயையும், அஞ்ஞான காலத்தில் வெளிப்பட்டு, ஞானகாலத்தில் நீங்கிவிடுகின்றது. ஆகையால் இம்மூன்று சரீரங்களும், தோற்ற ஒடுக்கங்களாகக் காணப்படுகின்றன. இவற்றை அறிந்து கொண்டிருக்கும், தற்பதலக்ஷியார்த்த வடிவ பிரஹ்ம சேதனமானது, தோற்ற ஒடுக்கம் இல்லாது, ஒரே வடிவமாகயிருப்பதினலேயும், மாயையாதியவற்றிற்கு, அதிஷ்

டானமாக யிருப்பதினுலேயும், மேற்படி மூன்று சமஷ்டி வடிவ தேகங்களும் பிரஹ்ம சேதனமன்று.

அவற்றிற்கு மேலாக எஞ்சி நிற்கும், வெறும் பாழ்வடிவ சூன்னியமும், விராட்டு இரணியகற்பம் அந்தரியாமி என்னும் ஈசுர ஆபாசங்களும், மேற்படி பிரஹ்ம சேதனத்தால், இதுவென்று, விளக்கப்படுவதினுல் மேற்படி பிரஹ்ம சேதனமன்று, என்று, நேதி கனிந்து, சச்சிதாநந்த வடிவ பிரஹ்ம சேதனம் ஒன்றே தற்பதார்த்த லக்ஷியார்த்தமாம். அத்தற்பத லக்ஷியார்த்த வடிவ சேதனமே உன் வடிவமாக யிருக்கிறது. ஆகையால் அகம்பிரஹ்மாஸ்மி என்று அநுபவிப்பாய் என்று, உபதேசித்தீர்கள். அதற்கு அடியேன் தற்பத லக்ஷியார்த்தத்தின் இடத்திலும் துவம்பத லக்ஷியார்த்தத்தின் இடத்திலும் ஐக்கிய விரோதபாவம் காணப்படுகின்றதனுல் எங்ஙனம் ஒன்ருகும் என்று வினவினேன். அதற்குத் தாங்கள் ஆகாசம் ஒன்றே உபாதிபேதத்தால் மேகாகாசம் என்றும் கடாகாசம் என்றும் பேதமாய் விளங்கு கின்றது. அதை முன்னிட்டு வழங்குதலுங் காணப் படுகின்றது. உபாதியோடுகூடிய கடாகாசத்திற்கும் மேகாகாசத்திற்கும் பிராந்தியினுல் பேதம் காணப் படினும் பேதப்பிராந்தி விஷயமாகிய கட, மேகாதி உபாதிகளை நீக்குமிடத்து அவற்றின் ஐக்கியத்திற்கு அவிரோதமாயுள்ள அதிஷ்டான கடாகாசத்திற்கும் மேகாகாசத்திற்கும் எப்படி இயற்கையாகவுள்ள அபேதம் காணப்படுகின்றதோ, அதுபோல், அகண்ட பிரஹ்ம சேதனம் ஒன்றே, வியஷ்டிவடிவ

உபாதியினுல் நீயென்றும் (சீவன் என்றும்) சமஷ்டி வடிவ உபாதியினுல் அதுவென்றும் (ஈசுரன் என்றும்) பிராந்தியினுல், பேதமாய்க் காணப்படுகின்றது. மேற்படி பிராந்தி விஷயமாகிய உபாதிபேதங்களை மேலே சொல்லிய துவம்பத தற்பதார்த்த சோதனைகளால் வியஷ்டி சமஷ்டி வடிவ உபாதிகளையும் அபிமானிகளையும் நீக்குமிடத்து, மேற்படி விசாரத்தினுல் நீக்கமுடியாது. எஞ்சி நிற்பதாகியும், ஐக்கியத்திற்கு அவிரோதமாயும், விசாரித்து நீக்குபவன் சொரூபமாக நிற்கும், சேதனங்கள், கூடஸ்தன் பிரஹ்மம் என்று சொல்லப்படுகின்றது.

மேற்படி உபாதிகளை நீக்குமிடத்து உண்டாகும் அபேதமானது இயற்கையாகவே சித்தித்திருக்கின்றது. இயற்கையாகவே உள்ள அபேதத்தை நீ அகம்பிரஹ்மாஸ்மி என்று அநுபவிப்பாயாக. மேற்படி அபேதமானது இயற்கையாகவே உள்ளதல்லாமல், நீ ஆக்குவது அல்ல. நீ பிராந்தியினுல் மேற்படி அநுபவத்தை மறந்து, பேதமாய் அநுபவித்தாய். பிராந்தியினுல் ஏற்பட்ட பேத அநுபவத்தை விட்டு, விசாரத்தினுல் இயற்கையாயுள்ள அநுபவத்தை அநுபவிப்பாயாக — திருஷ்டாந்தத்தின் கண், ஒரே ஆகாயத்தின் கண்ணே பிராந்தியினுல் ஏற்பட்ட உபாதியினுல் பேதமாகக் கற்பிக்கப்பட்டு பேதமாக அநுபவிக்கப்பட்டு வந்ததோ, விசாரத்தினுல் மேற்படி உபாதிகளை நீக்குமிடத்து இயற்கையாகவே உள்ள அபேதம் தானுகவே சித்தித்ததே அல்லாமல், விசாரித்தவன் ஏற்படுத்தியதல்ல, விசாரித்தவன், விசாரத்திற்குமுன், பேதமாக அநுப

வித்தான்; விசாரணைக்குப்பின் எப்போதும் உள்ள அபேதத்தையே எப்படி அநுபவித்தானே, அது போல் நீயும் உபாதியினுல் ஏற்பட்ட அவிசாரவடிவ பிராந்தியினுல் பேதமாக அநுபவித்தாய். விசாரத்தினுல், மேற்படி பிராந்தி வடிவ பேதத்தை விடுமிடத்து துவம்பத தற்பத லக்ஷிய கூடஸ்த பிரஹ்மங்களுக்கு இயற்கையாகவே உள்ள அபேதம் தானுகவே மிஞ்சுகின்றது, அதை நீ விசாரத்தினுல், பிராந்தியினுல் ஏற்பட்ட, பேத அநுபவத்தை விட்டு, இயற்கையாயுள்ள அபேத அநுபவத்தை அடைவாயென்று உபதேசித்தீர்கள். அடியேன் மேற்படி உபதேசத்தைப் பெற்று அடியேனுடன் ஒத்தஅன்பர்களுடன் சிந்தித்து ஏகாந்தத்தில் இருந்து மேற்படி கிரமப்படி படிப்படியாக விசாரித்து தாங்கள் உபதேசித்த முடிவான அர்த்தத்தை உணர்ந்து அதில் சந்தேக விபரீதங்கள் அற்ற நிலையில் நிலைத்து, இங்ஙனம் சிந்திக்கலானேன். இவ்வநுபவத்திற்கு எடுத்துக்காட்டாகவுள்ள பிரமாண வாக்கியங்களையும் சிந்தித்தேன். அப் பிரமாண வாக்கியங்கள் கீழ் குறிப்பிட்டவாறு உள்ளன.

## விவேகஷட்கம்

அநித்திய, பூதத், தேகநா, னன்று,
இந்தியத், தரங்க நானன்று.
நநித்த வாங், காரப், பிராணவர்க், கங்க,
ளன்றுநற், புத்தியு, மன்று.
தொனித்திடுந், தார, மனை செல்வங், களுத்குத்,
தூரமாஞ், சாட்சிநா, னென்றுந்.
தனித்துநித். தியமாயப், பிரத்தியகான், மாவாந்,
தற்பதப், பொருளதாஞ், சிவோகம். 1

உற்பவன், விருத்த, னன்றுநா, ஞேர்கா,
லத்தினு, நசிப்பவ, னன்று.
வற்பமாந், தேக, காரிய, மான,
வவையெலா, மகங்கரத், தல்லாற்.
றற்பத, வடிவாஞ், சின்மய, மான,
வெனக்கிலை, சகளநிட், களமா.
யெப்புறத், தேனு, மெல்லையற், றிருக்கு,
மின்பசிற், சொரூபமாஞ், சிவோகம். 2

சத்திய, ஞான, னந்தமாம், பிரமத்,
துதித்திடு, மாயையிற், சனித்த.
மெத்துமிவ், வுலகஞ், சேதனத், திடையே,
நசிக்குமஃ, தேதென, விளம்பிற்.
றத்துசொப், பனமுஞ், சுழுத்தியி, லசத்தாந்,
தன்மைபோற், சத்திலா, திருக்குஞ்.
சுத்தபூ, ரணமாய், நித்திய, மாகித்,
துலங்கிய, சொரூபமாஞ், சிவோகம். 3

பழுதைதன், னிடத்திற், பாம்புதோன், றுதல்போற்.
பரப்பிர, மத்திடை, யதனிற்.
கழிதரு, மஞ்ஞா, னத்தினாற், சீவ,
னுதித்திடக், கண்டவ, னொருவன்.
பழுதையென், றதனற், சற்பமோ, கழும்போய்ப்,
பழுதையாக், கண்டது, போல.
வழுவிறே, சிகனுர், சீவனீ, யன்றென்,
றறைந்திட, வாகினேன், சிவோகம். 4

எமக்குமன், னியமா, முலகமொன், றில்லை,
யெவ்வுல கங்களெம், மிடத்திற்.
சமித்துவுற், பவமா, மாதலான், மாயை,
வடிவம, தேதெனிற், சாற்ற.
வமைத்தகண், ணடி, விம்பமா, நிழல்போ,
லடங்கியெம், மிடத்தினில் விளங்குந்.
தமத்துவ, மில்லாச், சச்சிதா, னந்த,
தற்பத, விமலமாஞ், சிவோகம். 5

சாக்கிர, மதனி, லிந்திரி, யங்க,
டமக்குமேற், சாட்சியாஞ், சிவோகம்.
தேக்குசொப், பனத்தி, லுலகரு, பமதாய்ச்,
செய்மனச், சாட்சியாஞ், சிவோகம்
தாக்கிய, சித்த, நாசமாஞ், சுழுத்தி,
யவத்தையிற், சாட்சியாஞ், சிவோகம்.
நீக்கமி, றுரியா, னந்தமாஞ், சர்வ,
நிர்மல, சாட்சியாஞ், சிவோகம். 6

இங்ஙனம் சுவாமிகள் உபதேசித்த உபதேச மொழிகளை மேல்சொல்லிய கிரமப்படி ஒத்த அடியவர்களுடன் சிந்தித்தும் மேலவர்களிடம் கேட்டும் தனிமையில் விசாரித்தும் தியானித்தும் மற்றப் பிரமாணவாக்கியங்களை ஒத்திட்டும் பார்த்து தெரிந்தும் தங்களுடைய கருணையைச் சிந்தித்தேன்; சிந்தித்து அகமகிழ்ந்தேன். அடியேன் சுவாமிகளுக்குமுன் எழுதிய விசேஷணங்கள் அனைத்தும் பொருந்தியிருப்பதும் உணர்ந்தேன். உணர்ந்து, இச் சிந்தனத்தைச் செலுத்தினேன்.

மூன்றுவது முடங்கலின் விஷயம் :

அகண்டசிதாகாசரூபமாயிலகும் சுவாமிகளின் திருவடிகளுக்கு அநேக நமஸ்கார பூர்வகமா யெழுதிக்கொண்ட விண்ணப்பம் :

அடியேன் சுவாமிகளுக்குமுன் எழுதிய விசேஷணங்கள் அனைத்தின் பொருளையும் ஆராயுமிடத்து அவை அனைத்தும் அமைந்திருப்பதைப்பற்றி சிந்தித்து மகிழ்ச்சி அடைந்தேன்.

முதலாவது முடங்கலில் கண்ட விஷயங்களின் சிந்தனு விஷயம்.

அச்சிந்தனத்தின் கிரமம்.

ஸ்ரீமத் = என்பதற்கு எல்லா ஐஸ்வரியங்களும் நிறைந்தும் மேன்மையோடும் பொருந்தியிருப்பதைக் குறிக்கின்றது.

**2.** அகண்டசொரூபம் = என்பதற்கு, தேச கால வஸ்து பரிச்சேதமென்னும் கண்டமற்றது, அகண்டம். எல்லா அநாத்ம வஸ்துக்களும் மேற்படி மூன்று பரிச்சேதமென்னும் கண்டத்தோடு கூடியது. எங்ஙனமெனின், ஒரு வஸ்து ஒரு இடத்திலிருந்து ஒரு இடத்திலில்லாதிருப்பது தேச பரிச்சேதம் என்னும் கண்டமுடையது.

ஒரு வஸ்து உற்பத்திக்கு முன்னும் நாசத்திற்குப் பின்னும் இல்லாதிருத்தல் எதுவோ, அது காலபரிச்சேத வடிவ கண்டமுடையது.

ஒரு வஸ்து மற்றொரு வஸ்துவின் சொரூபமாகாதிருத்தல், வஸ்து பரிச்சேதமென்னுங் கண்டமுடையது.

திருஷ்டாந்தம் - கடம் ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திலில்லாததினுல் தேச பரிச்சேதமாகிய கண்டமும், மேற்படி கடம், உற்பத்திக்கு முன்னும் நாசத்திற்குப் பின்னும் இல்லாததினுல் கால பரிச்சேதமாகிய கண்டமும் மேற்படி கடம், படாதிகளின் சொரூபமாகாமையினுல் வஸ்து பரிச்சேதமாகிய கண்டமுமுடையது.

மேற்படி கடமானது மேலே சொல்லியபடி மூன்றுவித பரிச்சேதவடிவ கண்டமுடையதாகக் காணப்படுகின்றதோ அதுபோல எல்லா அநான்ம வஸ்த்துக்களும் மூன்று பரிச்சேத வடிவ கண்ட முடையதாகக் காணப்படுகின்றது. ஆத்ம வடிவ பிரஹ்ம சேதனம் மூன்று பரிச்சேத வடிவ கண்ட மில்லாததினுல் அகண்டம்.

எங்ஙனமெனின் எங்கும் பரிபூரணமாயிருத்த லினுல் தேச பரிச்சேத வடிவ கண்டமில்லாதது.

அநாதியாயும் நிராபேக்ஷ நித்திய வடிவமாயு மிருப்பதால் கால பரிச்சேதரூப கண்!_மில்லாதது. எல்லா அநாத்ம வஸ்துக்களின் விவர்த்த வடிவ அதிஷ்டான மாயுமிருப்பதால் எல்லாவற்றின் கண்ணும் சத்சித்து ஆனந்த வடிவமாக விளங்கிக் கொண்டு அவற்றிஂன் சொரூபமாயிருப்பதனுலேயும் எல்லா அநாந்ம பதார்த்தங்களும் சேதனத்தின் சொரூபத்தைப் பிரிக்குமிடத்து தனிவடிவமில்லாமல் வாக்கு கோசர மாத்திரமாகக் காணப்படுகிறதே யல்லாமல் அதிஷ்டான சேதனத்தைத் தவிர வேறு வடிவம் சித்திக்காததினுலேயும் வஸ்து பரிச்சேதமா கிய கண்டமில்லாதது. இங்ஙனம் தேச கால வஸ்து பரிச்சேத வடிவ கண்டமில்லாததினுல் அகண்டம். அத்தகைய இலக்ஷணத்தை குணமாகவோ விசேடண மாகவோ இல்லாமல் சொரூபமாகவே யிருப்பதினுல் அகண்ட சொரூபம் என்று சொல்லப்பட்டது.

3. பரிபூரண சொரூபம் = என்பதற்கு எங்கும் நிறைந்திருப்பது பூரணம்.

ஒரு இடத்திலிருந்து மற்ருெரு இடத்தில் இல்லாதது எதுவோ அது அபூரணம்.

எல்லா அநாத்ம வஸ்துக்களும் அத்தகைய அபூரண இலக்ஷணமுடையது.

எங்ஙனமெனின் பிருதிவி எல்லாக் காரியங்களுக்குங் காரணமாயிருப்பதால் வியாபகமுடையது-ஆயினும் பிருதிவிக்கு அப்புகாரணமாயும் பதின்மடங்கு வியாபகமுடையதா யிருக்கிறது—அப்புவிற்கு அக்னி காரணமாயும் பதின்மடங்கு வியாபகமாயுமிருக்கிறது, அக்நிக்கு வாயு காரணமாயும் பதின்மடங்கு வியாபகமுடையதாயிருக்கிறது. வாயுவுக்கு ஆகாசம் காரணமாயும் பதின்மடங்கு வியாபகமுடையதாயுமிருக்கிறது. ஆகாசத்திற்கு விக்ஷேபசக்தி காரணமாயும் பதின்மடங்கு வியாபகமுடயதாயிருக்கிறது—விக்ஷேபசக்திக்கும் ஆவரணசக்திக்கும் காரணமாகிய தமப் பிரதானப் பிரகிருதி காரணமாயும் வியாபகமுடையதாயுமிருக்கிறது—தமஸ் ரஜஸ் சத்துவம் என்னும் முக்குணங்களையுடைய மாயை அவித்தை என்று வழங்கும், மூலப்பிரகிருதி, குணியாயும் அதிகவியாபகமுடையதாயுமிருக்கிறது. அத்தகைய மாயை வடிவ பிரகிருதி மண்ணில் கடசக்திபோலவும் பிரளயகால சமுத்திர வெள்ளத்தில் ஒரு குமிழி போலவும் பிரஹ்மாத்ம சேதனத்தில் ஏகதேசத்தில் மித்தையாக யிருக்கிறது.

மேற்படி பிரஹ்மாத்ம சேதனம் நிராபேக்ஷிகமாக பூரணமாய் நிறைந்திருப்பதால் பரிபூரணம்—மேற்படி பரிபூரணம் ~~த்தோடு~~ குணமாகவோ தருமமாகவோ உடையதாகயில்லாமல் சொரூபமாகவே இருப்பதால் பரிபூரண சொரூபம் என்று விசேடித்துக் கூறப் பட்டது.

4. **சச்சிதானந்த சொரூபம் சத்து**=என்பதற்கு மூன்று காலத்திலும் பாதிக்கப்படாமல் அபாதிதமாய் அதாவது பொய்யென்று நிச்சயிக்கப்படாததாய் சதாகாலமும் அதாவது ஞானத்திற்கு முன்னும் ஞானசம காலத்திலும் ஞானத்திற்குப் பின்னும், இருக்கிறது இருக்கிறது என்று, ஒரேவிதமாக விளங்கிக் கொண்டிருப்பது சத்து.

**சித்து**=என்பதற்கு, தான் விளங்குவதில் அஷ்டப்பிரகாசங்களையும் அபேக்ஷியாமல் அவற்றை விளக்கிக்கொண்டு தானே விளங்குவது சித்து

**ஆனந்தம்** = என்பதற்கு, மிகுந்த பிரியத்திற்கு விஷயமாயுள்ளது ஆனந்தம் - அதாவது பூமண்டல முழுவதையும் ஒரு குடைக்கிழ் அரசாளும் சார்வ பௌமனின் ஆனந்தம், மனுஷானந்தத்தின் எல்லை யுடையது. அதுமுதல் இரண்யகர்ப்ப ஆனந்த மீருக பதினொரு வகை விஷயானந்தங்களும் ஒன்றை நோக்க மற்றையது நூறுமடங்கு அதிக ஆனந்தத் தைத்தரக் கூடியது. அப்பதினொருவகை விஷயா னந்தங்களும் பிரஹ்மானந்தத்தின் லேசமாயும் அதன் பிரதி விம்ப கற்பனு வடிவமாயுமிருப்பதால், சாதிருசிய வடிவ ஆனந்தங்களாக காணப் படுகின்றது.

பிரஹ்மானந்தமானது பரிபூரணமாயும் விஷயானந்தங்களின் அதிஷ்டான விம்ப வடிவமாயும் எதார்த்த வடிவமாயும் குறைவு மிகுதியில்லாமல் ஒரே படித்தாக விருப்பதால் பரமானந்தம் என்று சொல்லப்படுகின்றது. ஆகையால் நிரதிசய பிரியத்திற்கு (மிகுந்த பிரியத்திற்கு) விஷயமா யிருப்பதால் ஆனந்தம் என்று சொல்லப்படுகின்றது.

சத்து சித்து ஆனந்தம் மூன்றினையும் குணமாகவோ தருமமாகவோ வுடையதாயில்லாமல் சொரூபமாகவே யிருத்தலால், சச்சிதானந்த சொரூபம் என்று, கீர்த்திக்கப் படுகின்றது.

**5. அகநோக்க மனதில் விளங்குதல்** = என்பதற்கு, சீவப்பிரஹ்மங்களின் அபேதத்தையே கோசரிக்கும் அகண்டாகார விருத்தி, அக நோக்கம்; எனப்படும். அதன்கண் விளங்குதல் அகநோக்க மனதில் விளங்குதலாம். அகண்டாகார விருத்தியின் கண்ணுள்ள சிதாபாசபாகத்திற்குவிஷய மாகாமல் விருத்திபாக மாத்திரத்திற்கு விஷயமாதல் அதாவது ஆவரண பங்கமாத்திரத்தினுல் சுயமாகவே விளங்குதல், அகநோக்க மனதில் விளங்குதலாம். மனத்திற்குப் புறநோக்கம் அகநோக்கம்என இரண்டு நோக்கங்களுண்டு. அக வஸ்துவை விஷயமாக்குவது அகநோக்கம் என்றும், புறவஸ்துவை, விஷயமாக்குவது புறநோக்கம் என்றும் சொல்லப்படும். எல்லோரிடத்திலும் நான் நான் என்று மாறுதலில்லாது உண்டாகும் அகம்விருத்தியின் விருத்தி பாகத்திற்கு ஆவரண பங்கமாத்திரத்தினுல் சுயமாக

விளங்கும், ஆன்ம வடிவ பிரஹ்ம சேதனம் எதுவோ, அது, அகவஸ்து என்று சொல்லப்படும். அத்தகைய வஸ்துவைக் கோசரிக்கும் மனத்தின் விருத்தி பாகத்திற்கு, அகம்விருத்தி என்று சொல்லப்படும். பிரஹ்மாத்மாவைத்தவிர, எல்லா அநாத்ம வஸ்துக்களும், புறப்பொருள் என்று சொல்லப்படும். அவையும் அகம் என்னும் விருத்திக்கும், இது வென்னும் விருத்திக்கும், விஷயமாக இருகூருக விளங்குகின்றது.

தூல சரீரமுதல் அவித்தை சிதாபாசன்ஈருக வுள்ள எல்லாப் பொருள்களும் அகம் என்னும் புறவிருத்திக்கு விஷயமாம்.

மேற்படி தூலசரீரமுதல் சிதாபாசன் ஈருக வுள்ள வஸ்துக்களைத் தவிர, மற்ற எல்லா அநான்ம வஸ்துக்களும், இதுவென்னும் புறவிருத்திக்கு விஷயமாம்.

மேற்படி விருத்திக்கு விஷயமாகிய எல்லா அநாந்ம வஸ்துக்களும், தன் சரீராதிகளுக்கு வில்க்ஷணமா (வேருக) யிருத்தலினுல் புற வஸ்துக்கள் என்றும், அதைக் கோசரிக்கும் அந்தக்கரணவிருத்திக்குப் புறநோக்க மென்றுஞ் சொல்வது முற்றிலும் பொருந்துமாயினும், தூல சரீரமுதல் சிதாபாசன் ஈருகவுள்ள பொருள்கள், அகம்விருத்திக்கு விஷயமாய் (நான் நான் என்னும் அநுபவத்திற்கு விஷயமாய்) காணப்படுகின்றதனுல், அவைகளை எங்ஙனம் புறவஸ்துக்கள் என்று கூற முடியும்?

அவ்வஸ்துக்களை விஷயஞ்செய்யும் அகம்விருத்திகளைப் புறநோக்கமுடைய விருத்தி என்று எங்ஙனங் கூறமுடியும் எனின்?

அகநோக்கம், யதார்த்தம், பிராந்தி என்று, இரு கூருகக் காணப்படுகின்றது.

முன்னே சொல்லப்பட்ட, யதார்த்த அகவஸ்துவாகிய, பிரஹ்மவடிவ ஆத்மாவைக் கோசரிக்கும் மாருத அகம்விருத்தி, யதார்த்த அகம்விருத்தி என்று சொல்லப்படும்.

பிரஹ்மவடிவ ஆத்மாவைத்தவிர, மற்றனைத்தும், அநாத்மாவென்றும், புறப்பொருள் என்றும் சொல்லப்படுகின்றது. அப்புறப்பொருளை, பிராந்தியினுல் அகம் என்று கோசரிக்கும், அகம்விருத்தி, பிராந்திவடிவம் என்று சொல்லப்படும். அந்தப் பிராந்தி விருத்திக்கு விஷயமாகக் காணப்படும், அகப்பொருள்களும் பிராந்தி வடிவமே.

அது எங்ஙனம் நிச்சயிக்கலாமெனின்?

பிராந்திகாலத்தில் அகமாகவும், பிராந்திநீங்கின காலத்தில் இதவடிவமாகவும், எது பிறழ்ச்சியுடையதாகக் காணப்படுகின்றதோ, அதைப் பிராந்தி என்று சொல்லப்படும். அந்த விருத்தியைப் பிறழ்ச்சியுடையது என்றும், அதனுல் பிராந்திவடிவம் என்றும் சொல்லப்படும். மேற்படி அகப்பொருள்களும், மேற்படி விருத்திக்கு விஷய மாவதால் பிறழ்ச்சியுடையதென்றும், அதனுல் பிராந்தி வடிவம் என்றும் சொல்லப்படும். அதனுல் இத்தூல சரீர

முதல் சிதாபாசன் ஈருகவுள்ள எல்லா அநான்ம வஸ்துக்களும் பிராந்தியினுல் அகம் அகம் எனக் காணப்பட்டாலும், தனது ஆன்ம சொரூபத்தை மேற்படி பதார்த்தங்களினின்றும் வேறு பிரிக்கும் போது, இது நானல்ல இது நானல்லவென்னும் விருத்திக்கு விஷயமாகக் காணப்படுவதனுல், புறப் பொருளேயாகும்—எங்ஙனம்? பிராந்தி காலத்தில் இது ரச்சுவென்னும் விருத்திக்கு விஷயமாகாமல், சர்ப்பமென்னும் விருத்திக்கு விஷயமாய்க் காணப் பட்ட, மேற்படி சர்ப்பமும் விருத்தியும் யதார்த்த ரச்சு ஞான காலத்தில் இல்லாமல் மேற்படி சர்ப்பமும் அதன் ஞானமும் நீங்கி, ரச்சுவடிவமும் அதன் ஞானவடிவமும் காணப்படுகின்றது அதனுல் சர்ப்பமும் அதன் ஞானமும் எப்படிப் பொய்யென்று நிச்சயிக்கப்படுகின்றதோ, அதைப்போல் பிராந்தி காலத்தில் அகம் என்னும் விருத்திக்கு விஷயமாய்க் காணப்பட்ட சரீரமுதல் சிதாபாசன் ஈருகவுள்ள பதார்த்தங்கள் அனைத்தும், விசாரத்தினுல் உண்டான எதார்த்த ஞானகாலத்தில் இது நானல்ல இது நானல்லவென்று புறவிருத்திக்கு விஷயமாய்க் காணப்படுவதனுல், மேற்படி பிராந்தி வடிவ அகம் விருத்திக்கு விஷயமாகிய அநாத்ம வஸ்துக்களும், அவ்வகம் விருத்திகளும் மித்தையே.

முன்னே கூறிய இலக்ஷணமுடைய யதார்த்த அகம்விருத்தி யெதுவோ, அந்தமாருத அகம்விருத்தி யிலுள்ள, விருத்தி பாகத்திற்கு மட்டும் ஆவரண பங்கவடிவ விஷயமாக, சுயம் பிரகாசமாய் விளங்கு தலின்றி மற்ற விருத்திக்கு விளங்காமையினுல், அக

நோக்க மனதில் மாத்திரம் விளங்கும் வஸ்து வென்றும் கீர்த்திக்கப்பட்டது.

6. மேன்மை வாய்ந்த தென்பாண்டி நாட்டுத் தென்னகத் தீஸ்வரர் அருளால் = என்பதற்கு

ஸ்ரீ உமையாம்பிகையே, பாண்டி நாட்டின் தலைநகராகிய மதுரையில் அவதரித்து, திக்விஜயம் புரிந்து, அரசாட்சி செய்து, முக்கண் பிரானையே கணவராக அடைந்து, அரசாட்சியை அன்னவரிடத்தில் ஒப்புவித்து, அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும் புரியும்படி செய்தமையால் மேன்மை தங்கியதென்றும்; ஆதிநாராயணனே கண்ணனாக மதுராபுரியில் அவதரித்து அநேக திருவிளையாடல்கள் புரிந்திருக்கின்றார்; அம்மதுரை, வடக்கேயுள்ளதால், அதினின்றும் வேறுபிரிக்கும் பொருட்டு, தென்பாண்டி என்றும், வழங்கப்பட்டது. அத்தகைய சிறப்போடுங்கூடிய பாண்டியநாட்டில், ஒருபகுதியாகிய, ஏம்பல் சேகரம் தென்னகத்தி புரத்தில் எழுந்தருளியிருக்கும் அகத்தீஸ்வரர் அருளால் என்றும் விசேஷித்திருக்கிறது.

7. ஆன்மபோதம் பெற்று அதன் வடிவமாய் நிலைந்து = என்பதற்கு

எந்த அதிகாரியானவன் பூர்வ ஜன்மபுண்ணியத்தினால் இச்சன்மத்திலும், சிவனருளுண்டாக்கும், அரியசிவப்பணிகளை அதிகமாகச் செய்கின்றானோ, அவனுக்கு, "மிகமேவிய புண்ணிய பாவமெனும் வினையின் பயன்மேல் ஒருகால முறாது இகமேவரும்" (உடனேவரும்) என்ற வாக்கியப்படி, அடியேனுக்கு

முதற்குருபரராக எழுந்தருளிய சாத்தப்பனுராகிய தாங்கள் அண்மையில் கூறிய பணிகளை, கைக்கொண்டு, அபரிமிதமான பணிகளின் அரும்பயனுக, அரும்பணியைக் கொண்ட, அகத்தீசனுரே ஆண்டவர் என்னும் காரணப்பெயரோடுங் கூடிய வீரசேகரராக அவதரித்து அநுக்கிரகித்த ஞான வித்தையினுல், ஞானவிஷய, அப் பிரஹ்மாத்ம வடிவமாக நிலைத்தல் கூறப்பட்டது.

**8.** அவ்வாத்ம ஞானத்தை அடிமைக்கு = என்பதற்கு

சரீராதிகளைத் தவிர இதற்கு விலக்ஷணமாக, ஒரு ஆத்மா என்பது கிடையாது; யார்வந்து இதற்கு வேருக ஆத்மா ஒன்று இருக்கிறதென்று கூறினுலும், அவர்களை, அறியாதவர்கள் என்றும், வாய்ப்பிதற்றலர்கள் என்றும் அகங்கரித்து, எதிர்த்துப் பேசி வந்த அறியாதவனுகிய அடியேனையும், கருணையினுல் ஒரு பொருளாகக் கருதி, என் அசுர குணங்களை விலக்கித் தடுத்தாட்கொண்டு, அண்மைக்கணிருத்தி, அநதிகாரிகளுக்கு ஆன்ம ஞானத்தை உபதேசிக்கக் கூடாதென்று, சுருதி வாக்கியமும் ஆன்ருேர் வாக்கியமும் இருந்தும், அடியேனையும் தடுத்தாட்கொண்டு தாங்கள் அடைந்த ஆன்மாநுபவத்தை அடையும் பொருட்டு வலியுறுத்திச் சிட்சித்தும், விவேகாதி குணங்களை வரும்படி செய்தும், ஆத்மஞானத்தை அநுபவபரியந்தம் அடையும்படி செய்த ஆற்றலானது, சாதாரண மனிதப்பிறவி யுடையவர்களுக்கு அமையா

தென்றும், கீழ்க்குறிப்பிட்டிருக்கும் விசேஷணங்களை யுடைய பரமசிவமே இத்திருமேனி தாங்கி வந்து உபதேசித்தது, என்றுஞ் சிந்தித்துத்தங்கள் பெருமை யையுணர்ந்து அளவிலா ஆனந்தத்தை அடைந்தேன்.

9. அஸ்தூலாதி அதத்வியா விருத்தி இலக்ஷண விஷயராயும் = என்பதற்கு

காண்பவற்றை நேதிகளைந்து, காண்பவனைத் தெரிவிக்கும் இலக்ஷணம், அதத்வியா விருத்தி இலக்ஷணமென்று கூறப்படும்.

"தன்பதி யல்லாப்பேர்க டமையல்ல னல்லனென்ருள்
அன்பனைக் கேட்டநேர மவள்வெட்கி மௌனமானுள்
என்பது போலநீக்கி யிதன்றிதன் றெனச்சேடித்த
பின்பரப் பிரமந்தன்னைப் பேசாமற் காட்டும்வேதம்"

என்ற வாக்கிய இலக்ஷணத்தை அநுசரித்துக் காணப் படுவனவாகிய இத்தூல சரீரமுதல் சிதாபாசன் ஈருயுள்ள துவம்பதவிரோத வாச்சியார்த்தங்களையும், பிருதிவிமுதல் மாயை யீருகவுள்ள தற்பதவிரோத வாச்சியார்த்தங்களைக் கிரமப்படி, மேற்படி விசாரத் தினுல் நேதிகளைந்து, பின்னர் மேற்படி விருத்தியினுல் நேதிகளைய இயலாது, மேற்படி விருத்திக்கு அகோ சரமாய் மேற்படி விருத்தியை விளக்கும் அகமநுபவ வடிவமாக விளங்கும் பிரஹ்மான்ம சேதனத்தை உணர்த்தும்விருத்திக்குச் சாக்ஷியாய் விளங்குதலால், அதத் வியாவிருத்தி விஷயர் என்றுஞ் சொல்லப்பட் டது. தாங்கள் அத்தகைய வடிவமாக விளங்கு கிறீர்கள் என்று சிந்தித்தேன்.

## தடஸ்த இலக்ஷணம்

அத்துடன் ஜகத் ஜன்மாதி தடஸ்த இலக்ஷண விஷயர் = என்பதற்கு

லக்ஷியத்தின் ஏகதேசத்தில் ஒருபோது இருந்து தனது லக்ஷியத்தை, அலக்ஷியங்களினின்றும் வேறு படுத்திக் காட்டுவது, தடஸ்த இலக்ஷணம் என்று சொல்லப்படும்.

அத்தடஸ்த லக்ஷணமாவது இவ்விடம் எது கொள்ளற்பாலது எனின்,

சர்வஜகத்தின் உற்பத்தி, திதி, லயங்களுக்கு, அபின்ன நிமித்தோபாதான காரணமாயிருத்தலே தடஸ்த லக்ஷணமாம்.

## திருஷ்டாந்தம்

சிலந்தியானது, தன்னுல் பின்னப்படும் வலேக்கு சரீரப் பிரதானத் தன்மையால் உபாதான காரண மாகவும், புத்திப் பிரதானத் தன்மையால் நிமித்த காரணமாகவும் இருப்பதுபோல ஆத்மவடிவ பிரஹ்ம சேதனமும், தமப்பிரதானப் பிரகிருதி விசிட்டமாய் உபாதான காரணமாயும், சத்துவகுண மாயை வடிவ உபாதி விசிட்டமாய் நிமித்தகாரணமாகவும், விளங்குதலே இங்கு தடஸ்த இலக்ஷணமாம்.

மேற்படி இலக்ஷணமானது பிர ஹ்ம ா ன் ம சேதன லக்ஷியத்தின், ஏகதேசத்திலும், சிருஷ்டி, திதி சங்காரமாகிய ஒரு போதிலுமிருந்து, நையாயிக ராதிகள் கொண்டுள்ள சகத்காரணத்தினின்றும்

பிரஹ்மாத்மாவை வேறு பிரித்துக் காட்டுவதால், மேற்படிவிருத்திக்குத், தாங்கள், விஷயமாகியுமுள்ள பிரஹ்மான்ம வடிவமாக விருக்கிறீர்கள் என்பதைச் சிந்தித்து அறிந்தேன்.

## சொரூப லக்ஷணம்

எந்த இலக்ஷணமானது இலக்ஷியத்தின்கண் எப்போதும் இயல்பாகவும், இலக்ஷியத்தின் சொரூப மாகவுமிருந்து, தனது லக்ஷியத்தை மற்ற அலக்ஷியங் களினின்றும் வேறு பிரித்துக் காட்டுவது எதுவோ, அது, சொரூப இலக்ஷணமென்று சொல்லப்படும்.

## திருஷ்டாந்தம்

வெம்மை, ஒளிமுதலானவைகள், சூரியனது வடிவமாகவும்,எப்போதும் சூரியனிடத்திலிருந்தும், தமது இலக்ஷியமாகிய சூரியனை, அச்சூரியப்பிரகாசத்தால் விளக்கப்படும், அலக்ஷியங்களின்றும், வேறு பிரித்துக் காட்டுவது சொரூபலக்ஷணமாகுவதுபோல.

சத்து, சித்து, ஆனந்தமாகிய மூன்றும் எப்போதும் சேதனத்தின் வடிவமாயிருந்து இலக்ஷிய மாகிய பிரஹ்மான்ம சேதனத்தை அசத்து, சடம், துக்கமாகிய அலக்ஷியங்களினின்றும் வேறுபிரித்துக் காட்டுவதால் சொரூப இலக்ஷணமுடைமையாம். மேற்படி இலக்ஷணத்திற்குத் தாங்கள், விஷயமாகக் காணப்படும், பிரஹ்மான்ம வடிவமாக விளங்குவ தால், மேற்படி சொரூப இலக்ஷணத்திற்கு விஷய மாகவிருக்கின்றீர்களென்று சிந்தித்தும் அறிந்தேன்.

**10. சதசத் விலக்ஷணமாயுள்ள மாயைக்கு அதிஷ்டான சொரூபம்=என்பதற்கு**

சத் என்றும் அசத் என்றும் நிச்சயமாகச் சொல்ல முடியாததாய், பாதயோக்கிய சொரூப முடையது எதுவோ, அது அநிர்வசனியம் என்று சொல்லப்படும்; அத்தகைய இலக்ஷணமுடையது மாயையாம்.

மாயையை அசத்தெனக் கூறின், மலடி மகனைப்போல, சகத் காரணமெனல் இயலாது.

சத்தெனக் கூறின், ஞானத்தால் பாதமாதல் கூடாது. ஆகையால் மாயை, பாதயோக்கிய சொரூபமுடையதென்று பெறப்பட்டது. அத்தகைய மாயையானது, அதிஷ்டான வடிவ பிரஹ்மசேதனத்தின், சத்தை அன்றி, தனக்கென்று தனியே ஒரு சத்தைப்பெற்று வேருக விளங்காமையினுல், அதற்கு அதிஷ்டானம், பிரஹ்மான்ம சுத்தசேதனமே என்று சொல்லப்படுகின்றது. அத்தகைய சேதனவடிவமாய்த் தாங்கள் இருக்கிறீர்கள் என்று மகிழ்வு அடைந்தேன்.

**11. சதுர்மறைக்கரியர்=என்பதற்கு**

நான்கு வேதங்களின் முடிவாகிய நான்கு மகா வாக்கியங்களினுல் அறியக்கூடியவராயும், அறியக் கூடாதவருமாகியும், தாங்கள் விளங்குகின்றீர்கள். அங்ஙனமிருந்தும், நிஷேதமுக விசேஷணத்தால் உணர்த்தினுல் விதிமுக விசேஷணத்தால் விளங்கும் அர்த்தம், தானுகவே விளங்குமென்ற அபிப்பிராயத்

திஞல், சதுர்மறைக்கரிய பொருள் என்று கூறப் பட்டது.

வாக்கொடு மனமும் எதனைச் சென்று அடை யாது, திரும்பினதோ.

உபநிஷதப்பிரமாணம் ஒன்றிற்கே விஷயமாகிய, அப்புருஷனைப் பற்றி உம்மிடத்தில் வினவு கின்றேன்.—

சுத்தமனதால் அவ்வான்மாவை உணர்க,

என்ற வாக்கியங்கள் இருப்பதனுல், மறைக்கு எட்டும் எட்டாது என்று சொல்லப்படுகின்றது. இருவகை வாக்கியங்களுக்கும் முரண்பட்ட அர்த்தம் காணப் படுகின்றதே எனின்; மகாவாக்கியப் பிரமாணத்தின் சக்திவிருத்தியினுல் கோசரிக்கப் படாமையினுல் மறைக்கு, அரியதென்றும், மேற்படி வாக்கியத்தின், இலக்ஷணுவிருத்திக்கு விஷயமாவதால் அதாவது மேற்படி இலக்ஷணு விருத்தியினுல், ஆவரணம், பங்கமாக, தானுகவே சுயம் பிரகாசமாக விளங்குவ தால், மறைக்கு எட்டுமென்று கொள்வது, அர்த்த முரண்பாடு இன்ரும்.

அத்தகைய நான்கு வேதங்களின் நான்கு மகா வாக்கியங்களாகிய பிரமாணங்களின் சக்தி விருத் தியினுல் கோசரிக்கப் படாமையினுல் மறைக்கு அரிய தென்றும் கூறபபட்டது. அத்தகைய பிரமாணங் களின் சக்திவிருத்திக்கு விஷயமல்லாதவராயும், மேற்படி இலக்ஷணுவிருத்திகளின் ஆவரணபங்கரூப விஷயத்தால், தாங்கள் சுயமாகவே விளங்குகின்ற பிரஹ்மான்ம சொரூபமாக விருக்கின்றீர்கள் என் பதை எண்ணி மகிழ்ந்தேன்.

**12.** கல்யாண சொரூபராயுமுள்ள சுவாமிகள் = என்பதற்கு,

முன்னே கூறிய விசேஷணங்களோடுகூடிய சுத்த சேதனவடிவ அகத்தீஸ்வரரே மேலே கூறிய படி, சீவர்களிடத்தில் அருள், சிவபக்தி, திருந்திய துறவு, மெய்ஞ்ஞானம் என்னும் நான்கோடுங் கூடிய உருவமாக ஆவிர்ப்பவித்தலால், கல்யாண சொரூபராக விருக்கிறீர்கள் என்று சிந்தித்தும் அறிந்தேன்.

இதுவரையில் கூறிவந்தபடி எல்லா விசேஷணங் களோடும் கூடிய சுத்த சேதனமே, குருமூர்த்தமாக எழுந்தருளி வந்து, மிகவும் அசுர சுபாவமுடைய அடியேனையும், மேலே கூறியபடி தடுத்தாட் கொண்டு, முன்னே சொன்ன கிரமப்படி உபதேசித்த உபதேச மொழியால், சிரவண, மனனுதி, நிதித்யாச னங்கள் செய்து, அநுபவம் பெற்று அதன்கண்ணே நிலைத்து இன்புறுகின்றேன்.

இத்தகைய இன்பத்தை அளித்த சுவாமிகளுக்கு, குருதக்ஷிணை கொடுக்க வகை அறியாதவனுய், சுவாமிகளின் திருவடிப் புகழைப்பற்றி, எண்ணி யெண்ணி, ஆராமையடைந்து, கண்கள் கண்ணீர், மல்க ஏத்தி யேத்திப் போற்றிப் போற்றி வணங்கி வணங்கி மகிழ்கின்றேன்.

சுபம். சுபம். சுபம்.